94 சாரத் திருப்பதிகஞ் சாத்தி மலர்க்கையுழ
வாரப் பணிவிடைகொள் வாக்கிறையும்—போரறிவால்

95 தேறுஞ் சமயஞ் சிவசமய மொன்றெனவே
கூறும் பரசமய கோளரியும்—வீறொருத்தி

96 வாது நடத்தின் மகிழ்வோனை யாரூரில்
தூது நடத்திவைத்த சுந்தரரும்—மேதகுபேர்

97 ஆனந்த வெள்ளமகத் தாறாக மாறாமல்
ஊனந் தவிர்நயனத் தூற்றெடுக்கத்—தேனூந்து

98 பாவைதிருச் சிற்றம் பலமுடையார் கையெழுத்தாம்
கோவை யுரைத்தெமையாட் கொண்டவரும்—ஓவறுசீர்த்

99 தாதை யடியைத் தடிந்தானைப் பூசித்துத்
தீதகற்றுந் தண்டித் திருத்தேவும்—மாதவனும்

100 கார்கொண்ட மேனிக் கடவுளுமம் போருகனும்
சீர்கொண்ட விந்த்ராதி தேவருடன்—ஏர்கொண்ட

101 பான்மதியுஞ் சொர்க்கமத்ய பாதலத்து மேற்றுவிளக்
கான வொருபனிரண் டாதவரும்—வானகஞ்சூழ்

---

94. வாக்கிறை—திருநாவுக்கரசுநாயனார்.

95. பரசமயகோளரி—திருஞானசம்பந்தமூர்த்திநாயனார். வீறு — வீறுகின்ற. ஒருத்தி—பத்திரகாளியின்.

96. நடத்தின் மகிழ்வோனென்றது இறைவன் திருவாலங்காட்டில் ஊர்த்துவதாண்டவம் செய்த செய்தியைக் குறிக்கின்றது.

97. நயனத்தூற்றெடுக்க: "அழுதடியடைந்தவன்பன்" (திருவிளை. கடவுள்.) என்பர் பரஞ்சோதியார். "பேரானந்தமுற்றவர்க்கே கண்ணீர்கம் பலையுண்டாகும்" (தாயுமானவர்பாடல்) என்பது இங்கே கருதற்குரியது. ஊற்றெடுப்ப: "கண்கள், தொடுமணற் கேணியிற் சுரந்துநீர் பாய" நால்வர்நான். 4.

98. ஆட்கொண்டவர்—திருவாதவூரடிகள். அவர் கோவையுரைத்தது, "காதலித்து, நானூறு காரிகையை நல்கினேன் வாசகமும்" (திருவாரூருலா, 73–4) என்பதனாலும், "கோவுக்குக், கோவைசொன்னா னுண்டுநெஞ்சேகுற்றால வென்றுமரப், பாவைசொன்னா னுஞ்சொலுமே பாட்டு" (திருக்குற்றாலச் சிலேடை. அவை.) என்பதனாலும் விளங்கும்.

100. ஏர்—எழுச்சி; அழகுமாம்.

102 பூதலத்திற் பேறுபெற்ற புண்ணியரு மெண்ணரிய
பாதலத்து மேலான பன்னகரும்—போதநிறை
103 மோனந் தவாத முனிவோரு மெய்ஞ்ஞான
ஆனந்த சித்த ரனைவோரும்—வானந்தம்
104 ஏலப் புவன மிருநூற் றிருபத்து
நாலிற் கடவுளரு நண்ணியே—கோலமணித்
105 தேர்திகழ்வி மானஞ் சிவிகைமுதற் றங்கடங்கள்
ஊர்தி களிலு முவந்தேறப்—பேரொலிசேர்

**வாத்தியங்கள்.**

106 தக்கை யுடுக்கை தடாரிதவில் பேரியொரு
மிக்க முழங்க விருதார்ப்ப—மிக்கதொனி
107 மத்தளங்கைத் தாளவொலி மாரி முழக்கொலிபோல்
தத்தளங்கென் றேபாதஞ் சாதிப்ப—எத்திசையும்
108 தும்புரு வீணை சுரமண்டலம் பாடற்
றம்புரு நாதந் தனியிசைப்ப—உம்பரெல்லாம்
109 ஆர்ப்ப மறைக ளருண்மூவர் பாடலண்டம்
போர்ப்பவிசைத் தன்பர் புறஞ்சூழப்—பார்ப்புறத்தில்
110 இன்று புதுத்தே ரிசைந்தழுத்திச் செல்வதனால்
அன்றுபழந் தேர்வயிறு சூலுளைந்து—நன்றுதவு

---

103. அந்தம்—முடிவு.

102–3. போதநிறைமோனம்: "மோன மென்பது ஞான வரம்பு" **கொன்றைவேந்தன்.**

104. ஏல—பொருந்த; 177.

106. ஒருமிக்க—ஒருங்கே; 191. விருது—காளம் முதலியன.

107. தத்தளங்கு: தாளக்கட்டு; "மத்தளந் தத்த மழலை யொலிததும்பத், தத்தளந் தத்தந் தளங்கவென" (**சிவந்தெழுந்த பல்லவராயனுலா.**) பாதம்—பாதநூலிற் கூறிய விதி; ஆகுபெயர்.

108. சுரமண்டலம்—ஒருவகை இசைக்கருவி.

109. மூவர்பாடல்—தேவாரங்கள்.

110. பழந்தேர்—பூமி.

111 பைங்குழவி யொன்றீன்ற பான்மையென மேன்மைதரும்
செங்கதிரோன் றோர்கீட் டிசைதோன்றப்—பங்கயப்பூந்

**திருச்சின்னம்.**

112 தாட்டுணையா ளங்கயற்கண் சார்கூட லான்வந்தான்
ஆட்டை விடாப்புலியூ ரான்வந்தான்—நாட்டிவைத்த

113 சண்மதத்து மேலான தந்திவனத் தான்வந்தான்
மண்பரவு புற்றிடத் தான்வந்தான்—உண்மையன்பன்

114 ஆவணத்து முற்றும்விலை யாமென் றவன்வந்தான்
பூவணத்து வாசப் பொருள்வந்தான்—மேவினர்தம்

115 துன்பக் கடல்கடத்துந் தோணிபுரத் தான்வந்தான்
இன்பவெள்ளத் தையாற் றிறைவந்தான்—நம்பும்

---

111. கீட்டிசை=கீழ்த்திசை; "கீட்டிசைக்கரியசாத்தனும்" திருவிளை. திருநகரங்கண்ட. 43.

112–9. இக்கண்ணிகளில் தலங்களின் பெயர்களை அழகுபட அமைத்திருத்தல் அறிந்து இன்புறற்பாலது.

112. கூடல்—மதுரை, மணத்தல். ஆட்டை—நடனத்தை; ஆடென்னும் மிருகத்தை. புலியூர்—சிதம்பரம்; "நாட்டுக்கு ளாட்டுக்கு நாலுகா லையநின், ஆட்டுக் கிரண்டுகா லானாலும்—நாட்டமுள்ள, சீர்மேவு தில்லைச் சிவனேயிவ் வாட்டை விட்டுப், போமோசொல் லாயப் புலி" (காளமேகத்தின்வாக்கு); "அம்புலியூ ரென்னு மணிகொள் சிதம்பரத்தே, வெம்புலியொன் றெந்நாளு மேவுங்கா ணம்மானை, வெம்புலியொன் றெந்நாளு மேவுமே யாமாயின், அம்பலத்தைத் தான்விட் டகலாதோ வம்மானை, ஆட்டைவிட்டு வேங்கை யகலுமோ வம்மானை" (தனிப்பாடல்); "ஆட்டைப் புலிகாக்கு மம்பலமும்" விறலிவிடு. 131.

113. மதம்—சமயம்; யானையின்மதமென்பது வேறுபொருள். தந்திவனம்—திருவானைக்கா. மண்—பூவுலகம்; புற்றிடத்தான்—திருவாரூர் வன்மீகநாதர்.

114. ஆவணம்—அடிமையோலை, கடைவீதி. பூவணம்—திருப்பூவணமென்னும் தலம். வாசம்—வசித்தல், வாசனை.

115. தோணிபுரம்—சீகாழி.

116 அருங்குமுதச் செவ்வா யறம்வளர்த்த தேவி
மருங்கமரும் காஞ்சிபுரன் வந்தான்—நெருங்குசடா

117 தாரண மாமுனிவோர் தந்தந் துதிக்கைபெற்ற
வாரண வாசி யரன்வந்தான்—போணியாய்ப்

118 பாணித் தணிந்தபணிப் பைக்குளடங் காதபெரு
மாணிக்க மாமலை யான்வந்தான்—தாணிறையத்

119 தேங்கோய்வில் லானந்தத் தேனையன்பர்க் கூட்டிவைக்கும்
ஈங்கோய் மலையெம் பிரான்வந்தான்—தீங்கை

120 அடும்பரமன் காளத்தி யந்தாதி கொண்ட
கடம்பைச் சிவசங் கரனும்—நெடுங்கயிலைக்

121 குன்றுடையான் றொண்டர் குழாமுடையான் வந்தானென்
றென்றுதிருச் சின்ன மெடுத்திசைப்ப—மன்றல்

122 இசைந்ததிருத் தேர்வீதிக் கேகவுடன் கூடி
வசந்தன் றிருத்தேர் மருவப்—பசும்பொன்னிப்

## குழாங்கள்.

123 பூதலத்துப் பூவையரும் பொன்னாட்டின் மின்னாரும்
பாதலத்தி னுககன்னிப் பாவையரும்—சீதமலி

124 கொண்டன் முழக்கங் குறித்தமயிற் கூட்டம்போல்
எண்டிசையுங் கொள்ளா தெதிர்நின்றே—அண்டர்

---

116. அரு குமுதம். மருங்கு—பக்கம், இடை. காஞ்சி—ஒருநகரம், ஒருவகை மேகலை. முப்பத்திரண்டு தருமங்களும் அம்பிகையாற் காஞ்சியில் வளர்க்கப் பட்டனவென்பது இங்கே அறிதற்குரியது.

117. துதிக்கை—துதித்தல், தும்பிக்கை. வாரணவாசி—காசி.

118. பாணித்து—திருந்த அமைத்து; இச்சொ ஆலயபரிபாஷை; 252. பணிப்பை—ஆபரணப்பை, பாம்பின்படம்.

119. தேங்கு ஓய்வு இல். ஈங்கோய்மலை: இம்மலை ஈக்களாற் பூசிக்கப் பெற்ற தலம்.

122. வசந்தன்—மன்மதன். அவன் திருத்தேர்—தென்றல்.

122-3. பொன்னிப்பூதலம்—சோழநாடு.

125 பெருமானை மானைப் பிடித்திடும்பெம் மானைப்
பெருமானைப் போர்வைப் பிரானை—ஒருமானை

126 ஆகத்து வைத்தவனை யந்தகனை யங்கணம்போல்
ஆகத்து வைத்தவனை யங்கணனை—ஏகத்

127 தொருவனையான் போற்ற வுவந்தானை யென்றும்
ஒருவனையான் றன்னையரு ளோனைக்—கருவிழியாம்

128 உற்பலத்தா லர்ச்சித்தா ருள்ளன் புடன்பணிந்தார்
பற்பலவாத் தோத்திரங்கள் பண்ணினார்—பொற்பமரும்

குழாங்களின் கூற்று.

129 பாதாதி கேச பரியந்தம் பார்க்கவிழி
போதாதென் செய்வோ மெனப்புகன்றார்—வேதாதி

130 நூலறியா யாரு நுவலறியா நாடியயன்
மாலறியாத் தேவர் வடிவழகைச்—சாலவே

131 கண்டுதவப் பேறுபெற்றோங் காதலுற்றோங் கொன்றையருள்
கொண்டுதவப் பேறெமக்குக் கூடாதோ—வொண்டொடியார்

132 எல்லார்க்கு நல்லார்க ளென்ப தெமக்கிலையோ
கல்லார்க்கு நெஞ்சு கனியாது—தொல்லுலகில்

---

125. பெரும் ஆனைப்போர்வை. ஒருமானை—உமாதேவியாரை.

126. ஆகத்து வைத்தவனை; ஆகம்—பாதியுடம்பில். அந்தகனை—யமனை. அங்கணம்போல் ஆக—சேறுபோல ஆகும்படி. துவைத்தவனை-மிதித்தவனை.

126-7. ஏகத்தொருவனை: "யாவையுமா மேகத்தொருவன்" (திருக்கோவையார், 71.) ஒருவு அனையான்றன்னை—நீங்கிய தாயையுடையவனை; தாயில்லாதவனை யென்றபடி.

128. உற்பலம் அருச்சித்தற்குரிய எண்மலர்களுள் ஒன்று.

130. அறியா என்ற பெயரெச்சங்கள், தேவர் என்பதைக்கொண்டு முடிந்தன.

131. தவப்பேறு—தவத்தாலடையும் பயன். அருள்கொண்டு உதவ. பேறு—பெறுதல்.

132. என்பது—என்று மகளிர் கூறப்படுதல்.

133 தன்னுயிர்போன் மன்னுயிர்க்குத் தானிரங்க வேண்டுமென
முன்ன மனுநூன் முறையுரைத்தீர்—என்னசொல்வோம்
134 மிஞ்சு மதிப்பகைக்கும் வேனிரதத் தென்றலுக்கும்
அஞ்சா தரவி னணிகொண்டும்—குஞ்சரமாம்
135 கங்குலுக்கு மைந்து கணையரும்புக் கும்வேட்கும்
துங்கவிழி யாமுச் சுடர்கொண்டும்—புங்கவர்க்கா
136 ஆக்கங் கருதி யமர்க்குத் துணிந்தமதன்
போர்க்குனிவில் வாளி புறப்பட்டுத்—தாக்கமுன்பின்
137 பார்த்தீர் விழித்தீர் பயந்தலைக்கொண் டீருடலம்
வேர்த்தீ ரொருபாதி மெய்யானீர்—தோத்திரமாச்
138 சொல்லவோ வேணுமக்குத் தோற்றானோ தோற்றீர்நீர்
அல்லவோ மாலீ தறியானோ—வல்லமையால்
139 ஆண்பெண் ணிருவருமோ ராடைகட்டச் செய்ததுவும்
வீண்பேச்சோ வுங்கள் விளையாட்டோ—நாண்போக்கித்
140 தானையெல்லாம் போக்கித் தணியிலெங் கொங்கைமத
யானையெல்லாம் வெட்டவெளி யாக்கியே—சேனையெல்லாம்

---

134. சந்திரனையும் தென்றலையும் பாம்பு உண்ணும்; "தென்காற்று மிந்து வுஞ் சமனே கண்டீர், வீரமா லலங்கா ரர்க்கு விடவரா விடவ ராதோ" (**அழகர் கலம்பகம், 73.**) குஞ்சரமாம்—மன்மதனுக்கு யானையாகிய.

135. மன்மதன்கணைகளை அரும்பாகக்கூறுதல் மரபு; "கருப்புநாண் கருப்புவி லருப்புக்கணை தூவ" (**மணிமேகலை, 18: 105**); "கரும்புஞ் சுரும்பு மரும்பும் பொரும்படைக் காமர்வில்வேள்" (**சிதம்பரச்செய். 74.**) இருளுக்குச் சந்திரனாகிய கண்ணும், அரும்புகளுக்குச் சூரியனாகிய கண்ணும், மன்மதனுக்கு அக்கினியாகிய நெற்றிக்கண்ணும் பகை என்று கொள்க. புங்கவர்க்கா—தேவர்களுக்காக.

136. முன் தாக்க.

136-7. பின் பார்த்தீர். பயந்தலைக்கொண்டீர்; பயம்—நீர், அச்சம்; சிலேடை.

138. மால்—மயக்கம், ஈது அறியானோ.

139. 'ஓராடைகட்டச்செய்தது' என்றது அர்த்தநாரீசுவரமூர்த்தத்தை நினைந்து.

140. தானை—ஆடை. சேனையென்றது பெண்களை.

141 கும்பிட்டு நம்பகையைக் கும்பிட்ட தென்றுமதன்
தெம்பிட்டுச் சீறிச் சினந்திட்டான் — வம்பிட்டுத்

142 தையலருந் தூற்றினார் சற்றே கடைக்கணித்தால்
மையலரென் றையலர்க்கு வாடோமே — துய்யபுகழ்

143 ஈசரோ வென்றென் றெடுத்துப் பலபலவாப்
பேசு மவரி லொருபேதை — பூசன்மதன்

## பேதை.

144 விற்குணத்தைக் கண்டறியா மெல்லரும்பு தானுரைக்குஞ்
சொற்குணத்தை யோராச் சுகப்பிள்ளை — பொற்கை

145 உழையார் கடம்பலர்மட் டுண்டறியா வண்டு
மழையார்ப் புணராத மஞ்ஞை — இழைபுகா

146 மாணிக்க மீசனுக்கு மாரன் பணித்துவைக்குங்
காணிக்கை யானதங் கக்கட்டி — நீணிலத்து

147 மன்னுங் கலைபொருந்தா மான்கன்று பாற்படுநீர்
பின்னஞ் செயவறியாப் பிள்ளையன்னம் — புன்கவிஞர்

148 பாட்டி னெழுவாய் பயனிலைபோ லொன்றொன்று
கூட்டி முடியாக் குழலினாள் — வாட்டமுறும்

---

**141.** கும்பு இட்டு—கூட்டமாகி; கும்பென்பது குழும்பு என்பதன் சிதைவு போலும். நம்பகையை என்றது சிவபெருமானை. இங்ஙனம் நினைந்தவன் மன்மதன். தெம்பு—வன்மை; வழக்கு. வம்பு—பழிமொழி.

**142.** மை அலர் என்று—குற்றமுள்ள பூக்களென நினைந்து; பாணமாக நினையோம் என்றபடி. ஐ அலர்க்கு—ஐந்து மலர்ப்பாணங்களுக்கு.

**144.** குணம்—தன்மை, நாணியாகிய வண்டு; நைடதம், அன்னத்தைக் கண்ணுற்ற. 12. சொற்குணங்களாவன: இனிமை மெய்ம்மை முதலியன; **குறள். 194, பரிமேல்.**

**145.** உழை—மான். கடம்பு: இத்தலவிருட்சம். மட்டு—தேன். மழை ஆர்ப்பு—மேகத்தின் முழக்கத்தை. இழை—ஆபரணத்தில்.

**147.** கலை—ஆடை, ஆண்மான். பாற்படுநீர்—பாலோடு சேர்ந்த நீர், பகுதிப்பட்டதன்மை. பின்னஞ்செய—வேறுபிரித்தறிய.

149 அண்டத் தமரரை முன் னஞ்சலெனக் காத்தசிவன்
கண்டத் தமர்விடம்போற் கண்ணினாள் — மண்டுபுனற்

150 செல்லாருஞ் சோலைத் திருவால வாயதனில்
வில்லாரு மிந்த்ர விமானத்துட் — கல்லானை

151 சித்தரு ளாற்கரும்பு தின்னுமந்நாட் டென்னனணி
முத்துவடம் போலுமிள மூரலாள் — நத்துலவு

152 பாணிக்குட் சிற்றரும்பாம் பங்கயம்போல் வெற்றிமதன்
தூணிக்கு ளக்கணையின் றோற்றம்போல் — வாணிதொழு

153 நாரிசெங்கை யான்மறைத்த நாத னிருவிழிபோல்
சூரியனிற் சந்த்ரகலை தோய்ந்ததுபோல் — வாரிதியில்

154 பண்டமுத கும்பம் பதிந்திருந்தாற் போலவெளிக்
கொண்டினிமேற் றோன்றுங் குவிமுலையாள் — தொண்டர்

155 அரகர சங்கரவென் றானந்த வின்பக்
குரைகடற்கு ளாகிக் குளித்துப் — பரவசமாய்

156 ஏறுடையான் முன்ன மிசைநாத் தழுதழுத்துக்
கூறுந் துதிபோற் குதலையாள் — வீறுடைய

157 வள்ள றிருச்சடைமேல் வைத்தபிறை போற்களங்கம்
எள்ளளவு மெய்தா விதயத்தாள் — உள்ளமகிழ்

158 பூவையுடன் பேசியந்தப் பூவைசொன்ன சொல்லைமாப்
பாவைக்குத் தானே பயிற்றுவாள் — ஆவலுடன்

---

149. சிவபிரான் கண்டத்தில் உள்ள விடம் கொல்லுந்தன்மை உடைய தன்றாதலின் அஃது இவள்கண்ணுக்கு உவமை கூறப்பட்டது.

150. செல்—மேகம். வில்—ஒளி. இந்த்ரவிமானம்—இந்திரனாலமைக்கப் பட்ட சோமசுந்தரக்கடவுளது விமானம்.

151. சித்தர்—எல்லாம்வல்லசித்தர். முத்துவடம்—முத்துமாலையை; திருவிளை. 21:23.

152. பாணிக்குள்—நீருக்குள். அக்கணையென்றது தாமரையரும்பாகிய கணையை.

153. நாரி—உமாதேவியார்.

157. இறைவன் அணிந்த பிறைக்குக் களங்கம் இல்லை.

158. பூவை—நாகணவாய்ப்புள்.

159 முத்து வயிர முழுநீலங் கோமேதம்
வித்துரும மாணிக்கம் வெள்ளிசெம்பொன்—இத்தனையும்
160 அட்டி லடுகலங்க ளம்பி யுராலுலக்கை
வட்டிலெனச் சோறு வகுத்தாளும்—கிட்டமுறும்
161 அன்ப ருலகத் திருந்தா தருந்திடுசிற்
றின்பமெனக் கையா லெடுத்துண்டு—நன்கமைந்த
162 வீதிக் கணித்தாக மேவுதலு நூபுரங்கள்
நாதிக்கக் கைத்தாயர் நற்றாயர்—பேதையுடன்
163 சென்று பரனைத் தெரிசித்தா ரவ்வளவில்
இன்றுபுதுத் தேர்மீதி னீங்கிவரார்—என்றதுமே
164 அண்டம் புவன மருஞ்சக்ர வாளகிரி
விண்டலமேழ் பாதலம்பொன் மேருவரை—மண்டலங்கள்
165 சிற்றிலா கச்சமைத்துச் செல்வவிளை யாட்டயரும்
பற்றுக் குதலைமொழி பாலனென—மற்றிவளும்
166 நாடரிய பாலனுட னானிருந்து கூடவிளை
யாடநம தில்லி லமையுமெனக்—கோடரத்தில்
167 மையேந்து சோலை மதுரை நகர்க்கவுரி
கையேந்து பாலனருட் காபாலன்—மெய்யடியான்

---

160. வட்டில்—ஒருவகைப்பாத்திரம்; "பொன்வட்டில் பிடித்துடனே புகப்பெறுவ னாவேனே"; (பெருமாள்திருமொழி); "கறையடிச் சுவடெனுங் கனக வட்டில்கள்" **காஞ்சிப்.** திருநகரப். 14.

162. நாதிக்க—முழங்க; "மணிமுரசம், நாதிக்கும் பாண்டியனா நாட்டி னான்" **விறலிவிடு.** 38.

165. குதலை மொழி பாலன்—அம்பிகையைப் பாகத்தில் உடையவன்; குதலைமொழி—அம்பிகை; பால்—பாகம்; குதலையை மொழிகின்ற சிறுவனென்பது வேறுபொருள்.

166. கோடரம்—மரக்கிளை.

167. மை—மேகத்தை. கவுரி கையேந்துபாலனென்பதன் வரலாற்றைத் **திருவிளையாடல்** விருத்தகுமாரபாலரானபடலத்தாலுணர்க. காபாலன்—கபால மென்னும் கூத்துடையவன்; "காபால மாடுங்கால்" (கலி. கடவுள்.) அடியான்—திருவள்ளுவர்.

168 திங்கட் சுதையெனவே செய்யுமொரு முப்பாலும்
சங்கத்தி னூட்டுந் தமிழ்ப்பாலன்—அங்கசனுக்

169 காமளவு நாமத் தனங்கனெனப் பின்னுமொரு
நாமந் தரித்தநய னப்பாலன்—மாமறைக்கும்

170 அப்பாலுக் கப்பால னன்பாலும் பாலனையும்
இப்பால் விளையாட்டி னெய்துமோ—செப்புகெனத்

171 தேர்திரும்ப மற்றோர் தெருவி லிவ்விளமட
வார்திரும்பக் கொண்டு மனைபுகுந்தார்—மீதொருத்தி

**பெதும்பை.**

172 பேதைகுணம் பாதிமங்கைப் பெண்குணத்திற் பாதிகலந்
தோது பருவ முறுபெதும்பை—காதலெனும்

173 வித்தங் குரித்துவளர் மென்பூஞ் சிறுகொடிக்குச்
சித்தங் கொழுகொம்பாஞ் செய்கையினாள்—மெய்த்தவங்கள்

---

168. திங்கட்சுதை-சந்திரனிடத்துள்ள அமுதம். முப்பால்-திருக்குறள்; மூவகைப்பாலென்பது வேறுபொருள்; "முப்பாலும், மிஞ்சப் புகட்ட மிகவளர்ந் தாய்" (**தமிழ்விடுதூது, 25.**) சங்கம்-தமிழ்ச்சங்கம், சங்கு; "அல்லம தேவன் சரிதத் தீம்பால், புண்ணியர்தஞ் செவிவாயிற் றமிழ்ச்சங்கத் தான்முகந்து புகட்டி னானால்" (**பிரபு. துதிகதி, 11.**) தமிழ்ப்பாலன்-தமிழின் பகுதிகளை உடையவன். அங்கசன்-மன்மதன்.

169. நயனப்பாலன்-கண்ணை நெற்றியிலே உடையவன்; பாலம்-நெற்றி.

170. எய்துமோ-வருவானோ.

167—70. இப்பகுதியோடு, "யாவன் பால னிவன்புக லென்றேன், மேவன் பாநகை மேவுறப் புரிந்து, மூன்னிவன் பெருமறை மொழிக்கப் பாலன், மன்னிவன் பாரரையின் வளர்கப் பாலன், மூர்த்தி முதலா மொழிமுப் பாலன், சீர்த்திகொ ணீற்றொரு திகழ்கட் பாலன், அறுவகைச் சமயத் தறுவகைப் பாலன், மறுவகை சுருதி மனைத்தக பாலன், ஆறா றாய வவைக்கப் பாலன், மாறா தியற்றி வயக்குகா பாலன் வளர்தரு தெய்வ மனுச்சா பாலன், தளர்வரு கௌரி தனக் கழும் பாலன், தழைதரு மிந்நாட் சைவபரி பாலன், பிழைதரு தன்மையில் பெருந்தவப் பாலன்" (***அம்பலவாணதேசிகர்கலம்பகம், 51.**) என்பது ஒப்பு நோக்கற்குரியது.

173. வித்து அங்குரித்து-விதைமுளைத்து.

---

*இந்நூல் மகாவித்துவான் ஸ்ரீமீனாட்சிசுந்தரம்பிள்ளையவர்கள் இயற்றியது.

174 ஈட்டிலு மீசனரு ளெய்தி முடிப்பதுபோல்
கூட்டி முடிக்குங் குழலினாள்—நாட்ட நுதல்

175 ஏற்குமெம்மான் கைம்மா னினமோ வெனமருண்டு
பார்க்கும் புதியமருட் பார்வையாள்—சீர்க்கமலன்

176 இவ்வளவு செய்தோ மினிநிகரி லாதவெழில்
அவ்வளவு பூரித் தமைப்பதனுக்—கெவ்வாறென்

177 றேலத்தன் சிந்தையுள்ளே யெண்ணி முடிக்குநிகழ்
காலத் தமைந்தமுலைக் கன்னிகையாள்—சாலநிறை

178 விற்பளிங்கு மாளிகையின் மேனிலத்து மின்னனைய
பொற்பளிங்கு வாருமெனப் புந்திமகிழ்—அற்புடைய

179 தன்னனைய பெண்க டனித்தனியே சூழ்ந்திருக்க
வென்னனைமுற் றுமுலைபங் கீசனெழில்—மன்னுதிருக்

180 கந்தரம்போ னீலக் கழங்குங் களங்கமில்லாச்
சந்திரன்போன் முத்தின் றனிக்கழங்கும்—தங்கையுடற்

181 பாதியன்ன பச்சைப் பசுங்கழங்கும் பாதியெழிற்
சோதிமா ணிக்கச் சுடர்க்கழங்கும்—நாதலரும்

182 கொன்றையந்தே னன்னநிறக் கோமே தகக்கழங்கும்
குன்றுகங்கை போல்வயிரச் சொற்கழங்கும்—மன்றுடையான்

183 வேணியன்ன செம்பவழ மென்கழங்கும் பங்கயப்பூம்
பாணி யதனிற் பரிந்தெடுத்து—சீணிலத்துப்

---

175. கைம்மான் மருண்டு பார்க்கும் என இயைக்க.

176. பூரித்து—நிறைத்து.

177. ஏல—பொருந்த. கன்னிகை—அரும்பு.

178. பொற்பன் இங்கு வாரும் என்று அவர்களை அழைக்க.

179. என் அன்னை.

180. கந்தரம்—கழுத்து.

180—81. உடற்பாதி—உமையின் திருவுருவத்தை. பாதி— சிவபெருமானுடைய திருவுருவம்.

182. கோமேதகம் தேனின் நிறமுள்ளது; "கோமேதகத்தை, மருவுவயிரியத்தின் மீது தூய மதுத்துளிமே வியதென்பர்" திருவால. 25:21.

183. வேணி—சடை. பாணி—கை.

184 பாகாங் குதலைமொழிப் பாவைகுறித் தொன்றையெடுத்
தேகாம் பரத்தி னிசைபாடி—வாகாகக்

185 கூடு மிரண்டெடுத்துக் கொண்டாடி யன்றிருவர்
தேடு மலையின் செயல்பாடி—நாடரிய

186 வள்ளிதழி மூன்றெடுத்து மன்னு திரிசிராப்
பள்ளி யெனுந்தலத் தைப்பாடி—உள்ளமகிழ்

187 வாடலா னாலென் றடுத்தெடுத்து நான்மாடக்
கூடல்வளம் பாடிமிகக் கொண்டாடித்—தோடவிழும்

188 கிஞ்சுகப்பூஞ் செவ்வாய்க் கிளிமொழியா ளோரெடுத்துப்
பஞ்சநதி மான்மியத்தைப் பாடியே—கஞ்சவிழி

189 அத்திறத்தா லாறெடுத்தன் றாறுமின்னு மட்டமா
சித்திபெற்ற மெய்த்தலத்தின் சீர்பாடிக்—கைத்தலத்தில்

190 ஏழெடுத்துப் பாரிடத்தி லித்தலங்க ளாதியா
ஏழுலகத் தெம்மா னிசைதலங்கள்—சூழுறும்பே

191 றெல்லாங் கடம்பநக ரெய்தினோர்க் குண்டெனவே
எல்லா மொருமித் தினிதெடுத்துச்—சல்லாப

---

184. பாகு—தேன்பாகு. ஏகாம்பரம்—காஞ்சியிலுள்ள திருவேகம்பமென்னும் தலம்.

185. மலை—திருவண்ணாமலை.

186. வள்ளிதழி—பெதும்பை. திரி—மூன்று.

187. நான்மாடக்கூடல்—மதுரை; நான்குமாடங்கள்கூடிய இடம் என்பது இதன் பொருள்; நான்குமாடங்களாவன கன்னி, கரியமால், காளி, ஆலவாயென்பன; இவற்றைப்பற்றிய வரலாறு மதுரைக் காஞ்சி, 429-ம் அடி உரையின் அடிக்குறிப்பால் உணரலாகும்.

188. கிஞ்சுகப்பூ—முள்ளுமுருக்கைப்பூ. பஞ்சநதி—திருவையாறு. கஞ்சவிழி—தாமரைபோன்ற கண்ணையுடைய பெதும்பை.

189. மெய்த்தலம்—பட்ட மங்கை; இது பட்டமங்கலமென இக்காலத்து வழங்கும்; "பட்ட மங்கையிற் பாங்கா யிருந்தங், கட்டமா சித்தி யருளிய வதுவும்" திருவாசகம், கீர்த்தித். 62-3.

191. ஒருமித்து—ஒருங்கே; "காத லிருவர் கருத்தொருமித்-தாதரவு, பட்டதே யின்பம்" ஔவையாடல்.

192 மூக்குத்தி முத்தாட முத்து வடமாட
நோக்கிரண்டு மாட நுசுப்பாட—ஆக்கமகள்

193 கொண்டாட மாது செங்கை கொண்டாடும் போதிலே
வண்டாடுங் கூந்தலனை மாதனைக்—கண்டிங்

194 கமையு மமையுமட வன்னமே யென்னும்
அமைய மதனிலெமை யாளும்—உமைபாகன்

195 அத்த னிருத்த னடிக்கண் மலர்க்கணை
வைத்திட மெச்சி மகிழ்ச்சிபெ—றத்திரி

196 விக்ரம னுக்கு மிகுத்த ப்ரபைக்கன
சக்ரம ளித்திடு தற்பரன்—உக்ரம

197 குக்குட மூற்ற கொடிக்கர சைச்சொரு
திக்கை யனைத்தரு சிட்டன—னுக்ரக

198 சச்சிதா னந்தச் சதாசிவனம் பொற்றடந்தேர்
விச்சைமணி வீதிதனின் மேவுதலும்—பச்சைமயில்

199 ஆயமன்ன சாய லணியிழைமின் னோருடனே
தாயரும்போற் றிப்பணியத் தான்பணிந்தாள்—தூயனத்தன்

200 மாலளந்து காணு மலையை யிருவிழிக்கோ
லாலளந்தா ளந்த வளப்பறிந்தார்—பாலைமார்

---

192–3. நோக்கு—கண்கள். நுசுப்பு—இடை. ஆக்கமகள்—திருமகள். மாது—பெதும்பை. கொண்டு—மேற்கூறிய அம்மானைகளைக்கொண்டு.

194. அமையும்—போதும். அமையம்—சமயம்.

195. மலர்க்கணை—மலர்போன்ற கண்ணை.

195–6. திரிவிக்ரமனுக்கு—திருமாலுக்கு. ப்ரபை—ஒளி. சக்கரம்—சக்கராயுதத்தை.

197. குக்குடம்—கோழி. அரசை—முருகக்கடவுளை. சொல் துதிக்கையனை—விநாயகனை.

198. விச்சை—சிற்பவித்தை.

199. ஆயம்—கூட்டம்.

200. கோல்—அம்பு, அளவுகோல். அளப்பு—அளத்தலை. பால்—பக்கத்தினர்.

201 தன்னை யறியுந் தருணம்வந்த தாற்றலைவன்
தன்னை மனக்குறிப்பிற் றானறிந்தாள்—பின்னெனவே
202 எண்ணிய போதி லிவர்பாகம் பச்சையாய்
நண்ணியவா றென்று நவிலுமெனக்—கண்மணியே
203 சூலிக்குப் பச்சுடம்புஞ் சொன்றூலைப்பா லும்பெருகப்
பாலிக்கு மென்றுசொல்லாற் பாராட்டிச்—சேல்விழிப்பெண்
204 மாலையிட வந்தீரிம் மாதினுக்கு நீர்வலிய
மாலையிட வந்ததென்ன மார்க்கமோ—மேல்பசப்புக்
205 காட்டுமான் காட்டியிசைக் கானமறி யாதவெங்கள்
வீட்டுமான் கைக்கொளவோ வீதிவந்தீர்—கேட்டிடரோ
206 நன்றாச்சு தையர் நடத்தைவிடர் புல்லருமே
நன்றாச் சரியமென நாடுவார்—என்றென்று
207 செப்பும் வினோதந் திறமெனக்கொண் டேயமுதம்
ஒப்புமிள மூரலுட னோர்வீதிக்—கற்புதனும்
208 செல்லக் கனிவாய்ச் சிறுகுயிலு மின்னாரும்
இல்லத் திருந்தா ரினியொருத்தி—வல்லதிரு

---

202. அனைமார் (200) எண்ணியபோதில். என-என்று பெதும்பை கேட்க.

203. சூலி-சூலத்தையுடைய உமை, கர்ப்பம் உடையவள். பச்சுடம்பு-பச்சை உடம்பு, ஈன்றணிமைத்தாகிய உடம்பு. பாலிக்கும்-அருள்செய்வார். சேல்விழிப்பெண்-அங்கயற்கண்ணம்மை.

203-4. இத்தலத்தில் வேதசன்மாவுக்காகச் சிவபெருமான் மணக்கோலம் காட்டிய வரலாறு இங்கே அறிதற்குரியது; கண்ணி, 27-31. மாலை-மயக்கத்தை. பசப்பு-பச்சைநிறம், ஏமாற்றுதல் (பாசாங்கு); "இயல் பசப்பும்" சாபேந்திர. துறவந்தி, 30.

205. மானைக்காட்டி மானைப்பிடித்தல் வேடர்கள் வழக்கம். மான்-உமாதேவியார். கானம்-சங்கீதம், காடு; சிலேடை. காட்டுமானைக் காட்டி வீட்டுமானைக் கொள்ளவந்தீரென்பது இதிலுள்ள நயம்.

206. நன்று ஆச்சது; ஆச்சது-ஆயிற்று; 233. நடத்தை-நடை, நடத்தை. விடர்-விடபுருஷர்கள், விடத்தையுடைய ஆதிசேட அவதாரமாகிய பதஞ்சலிமுனிவர். புல்லர்-புன்மைக்குணம் உடையவர், புலிக்காலையுடைய வியாக்கிரபாதர்; புல்-புலி. நன்று-மிகுதி.

208. குயில்-பெதும்பை.

## மங்கை.

209 மங்கைகலை மங்கைமலை மங்கையெனு மூவருமிந்
நங்கைதனைக் கண்டக்கா னம்பதிகள்—இங்குநமை

210 வஞ்சிப்ப ரென்று மனம்வாக்குக் காயத்தில்
அஞ்சா திருக்கவெழி லார்மங்கை—எஞ்சாது

211 காலை யரும்பிப் பகலெல்லாம் போதாகி
மாலை மலரு மயலென்றுற்—போலவே

212 பேதை யரும்பிப் பெதும்பையந்தப் போதாகி
மாது மலர்ந்த வனப்பினாள்—சோதிமணிப்

213 பன்னாகம் பூண்டோன் பாவையிடைத் தூதுசென்ற
அந்நா ளிருள்போ லளகத்தாள்—உன்னாமல்

214 அன்றுநமை வென்றகண்ணான் றுமினிச்செய் கையிதென
நின்றுநின்று பார்த்து நினைத்துமதன்—இன்றுசிவன்

215 முக்கணையும் வெல்ல முழுநீல முக்கணையா
இக்கணையோ டெய்வே னெனுங்கண்ணாள்—தக்கதிறல்

216 நாண்மடமச் சம்பயிர்ப்பா நன்மந் திரர்சூழப்
பூண்முலையா மாமகுடம் பொற்பமைத்து—மாணிழைமார்

---

209. பதிகள்—கணவர்கள்.

208—10. மனம்—மார்பு; அதிலுள்ளவள் திருமங்கை. வாக்கு—இங்கே நாக்கு; அதிலே உள்ளவள் கலைமங்கை. காயம்—உடம்பு; அதிலே உள்ளவள் மலைமங்கை; நிரனிறை.

211. "காலை யரும்பிப் பகலெல்லாம் போதாகி, மாலை மலருமிந் நோய்" என்னும் திருக்குறளை இக்கண்ணி குறித்துச் சுவைததும்ப நிற்கின்றது.

212. மாது—காதல்; சீவக. 356.

213. பல் நாகம்—பல பாம்புகளை.

214. நின்று நின்று பார்த்து—மிக ஆலோசித்து.

215. முக்கணையும் வெல்ல—மூன்று கணைகளையும் வெல்ல. தன்கையிலுள்ள நீலமலர்ப்பாணம் ஒன்று; இவள் கண்ணாகிய நீலமலர்ப்பாணம் இரண்டு. முழு நீலம்: "மாதே முழுநீலங், கொல்லும்" இராத்திரிச் சருக்கம், 11.

216. மந்திரர்—மந்திரிகள்.

217 அங்கசன் மந்த்ரமெல்லா மாக்கம் பெறவுரைப்பத்
தங்குமனச் சிங்கா தனத்தேற்றி— அங்கணன்றன்

218 சீர்த்தி யபிடேகஞ் செய்து தலைமைபெறு
மூர்த்திகர முண்டாக்கி மோகமெனும்—பார்த்திபனுக்

219 கிட்ட மிருக்கநல்லா ரெல்லாருங் கொண்டாடப்
பட்டந் தரித்த பருவத்தாள்—கட்டிசைந்த

220 செம்பதும ராகச் செழுமணிப்பொன் னூடாங்கில்
அம்பதுமை மின்னு ளருகிருக்க—விம்பவிதழ்

221 அன்னமுன்னந் தாருவனத் தங்கனைமா ரேந்தியபால்
அன்னமென முத்தினணி யம்மானை—தன்னிருகைக்

222 கொண்டா ளிசையாற் குயிலுணச் செங்குமுதம்
விண்டா ளெடுத்து விளையாடல்—கண்டோர்கள்

223 துன்றனமூன் றங்கையெனச் சொல்வனசப் பூவிரண்டில்
ஒன்றிருக்க வொன்றெழுவ தொக்குமென—வென்றிமழு

224 வல்லா னுருவெளியின் மாலை யெனத்திரண்டு
பல்லாரங் கண்டெழுந்து பார்ப்பதென—வல்லமைசொல்

225 அம்மானை யாடிவென்ற வம்மானைப் பாடியே
அம்மானை யாடு மளவிலே—எம்மானும்

---

218. சீர்த்தியாகிய நீரை அபிஷேகம்செய்து; சீர்த்தி வெள்ளைநிறமுடையது; அதனுல் அது வெண்மைநிறமுடைய அபிஷேகதீர்த்தமாகக் கூறப்பட்டது.

217–8. அபிடேகத்தாலும் மந்திரத்தாலும் மூர்த்திகாமுண்டாகுமென்பர்; காஞ்சிப்புராணம், நகரேற்றுப்படலம் 162–70—ஆம்பாடல்களைப் பார்க்க.

219. நல்லார்—பெண்கள், சான்றோர். கட்டு—கட்டுதல்.

220. பதுமை—திருமகள். விம்பம்—கொவ்வைக்கனி.

221. அன்னம்—மங்கை; எழுவாய். பாலன்னம்—பாற்சோற்றுத்திரளை.

222. செங்குமுதம் விண்டாள்—வாயைத்திறந்து பாடினுள்.

223. துன்று அனம் மூன்று—நெருங்கிய மூன்று அன்னப்பறவைகள்.

225. அம்மானை—அந்தக் காளியை; அ: உலகறிசுட்டு. ஆடிவென்ற—ஊர்த்துவதாண்டவம்செய்து வெற்றிகொண்ட. அம்மானை—சிவபெருமானை. திருக்காளத்திநாதருலா, 349; திருப்பூவணநாதருலா, 265.

226 சீதள சோம திவாகர லோசன
வேத சொரூப விநோதபு—ராதன

227 மாருத பாவக மாதவ சாயக
மேரு சராசன வீரச—ரோருகப்பொற்

228 பாதன் கயிலைப் பரமன் கடம்பவன
நாதன் றிருவீதி நண்ணுதலும்—மாதுகாத்

229 தம்மனையை வைத்தா ளனமனையார் தங்களுடன்
அம்மனைநின் றேகி யடிபணிந்தாள்—செம்மக்

230 கருவிலியைக் கண்ணாரக் கண்டாள்கண் காணா
உருவிலியைக் காணென் றுறுக்கி—மருமத்

231 தொருகோல் செவிமட் டுறவாங்கி விட்டான்
குருகோ லிடுங்காப்பூங் கோதை—வெருவியே

232 அம்புலி யென்ப தழற்க ணுறும்புலியோ
வம்புரைக்கப் பெண்கண்மட மாணாரோ—கும்பமுனி

233 குன்றிற் பிறந்த குழவியிளங் காலுடலம்
கன்ற வுதைத்திடும்வன் காலச்சோ—லென்றுகுயில்

---

226. சோம திவாகர லோசனம்—சந்திரனையும் சூரியனையும் கண்ணாக உடைய.

227. மாருத பாவக மாதவ சாயகம்—காற்று, நெருப்பு, திருமால் என்னும் மூவராலாகிய அம்பையுடைய; "வல்லாயெரி காற்றீர்க்கரி கோல்வாசுகி நாண் கல், வில்லாவெயி லெய்தான்" (திருஞா. தே.) மேருசராசனம்—மேருவாகிய வில்லையுடைய. சரோருகம்—தாமரைமலர்.

229. அம்மனை நின்று.

229–30. செம்மக்கருவிலியை—பிறப்பில்லாதவனை. உருவிலி—மன்மதன்; இது தன்மைக்கண் வந்தது. மருமத்து—மார்பில்; நெஞ்சில்.

231. ஒருகோல்—ஓரம்பு; என்றது தாமரையரும்பை; அதுவே நெஞ்சி லெய்யப்படுவது; "நெஞ்சி லரவிந்தம்" இரத்தினச் சுருக்கம், 37.

232. வம்பு—பழிமொழி. கும்பமுனி—அகத்தியர்.

233. குன்று—பொதியின்மலை. குழவியிளங்கால்—தென்றற் காற்று; "சிறுகாற் குழந்தாய்கேள்" (பத்மகிரிநாதர் தென்றல்விடுதூது, 112.) கால்—காற்று, பாதம்.

234 ஓசையெல்லாங் காளகண்டத் தூற்றதோ வுள்ளடங்கும்
ஆசையினி யாசைக் கடங்காதோ—பேசுமொழி

235 அஞ்சுகமன் னீரிவின் யாமமொரு நாளுமினி
அஞ்சுகமோ வாறுகமோ வாரறிவார்—நெஞ்சுகந்து

236 கூட்டிவைக்க வல்லீரோ கூறுமெனத் தெள்ளமுதம்
ஊட்டிவைத்த சொல்லா ருரைசெய்வார்—கேட்டீரோ

237 பாதி யுடம்பாய்ப் பசப்பையுற்ற பெண்பாலாற்
போதவன்னி யத்தமனப் போதுறலாற்—கோதிலா

238 மீனக் கொடியன் விரைவிற் பயந்ததால்
ஊனக் கொடியகரு வுள்ளடையா—மோனர்

239 இமய வரையளித்த வெந்தையனை யென்னும்
உமையு முறையுமே யொத்த—அமைவால்

240 இவளுக் கொருபா லிசையுமெனப் பாகத்
தவளுக் கறியா தமைக்கும்—உவமை

234. காளகண்டம்—குயில்; விஷம்பொருந்திய கழுத்தென்பது வேறு பொருள். ஆசைக்கு—திக்குக்களில்.

235. அம் சுகம் அன்னீர்; சுகம்—கிளி. அஞ்சு உகமோ—ஐந்து யுகங் களோ; "இற்றை நீடிரவொன், றஞ்சுகந் தத்தை விளக்கும்" திருவேங்கடத் தந்தாதி, 12.

237–9. சிவபெருமானுக்கும் அம்பிகைக்கும் மங்கைக்கும் சிலேடை.

பசப்பு—பச்சைநிறம், பசலை. வன்னி அத்தம் மன்ன போதுறலால்—நெருப்பு கையின்கண் இருக்க வருதலால், கிளி கையின்கண் தங்கியிருப்ப வருத லினால்; அத்தமனப்போது வன்னி உறலால்; வன்னி—நெருப்பாக. மீனக் கொடியன்—மன்மதன், பாண்டியன். விரைவில்—சீக்கிரத்தில், மணம்பொருந் திய பூவாகிய வில்லை. பயந்ததால்—அஞ்சினமையால், பெற்றதால்.

239. இமையவரையளித்த: சிலேடை. எந்தை என்னும் உம்மையும் அனை என்னும் உமாதேவியையும் என முறையே கூட்டுக.

240. ஒருபால்—ஒருபக்கம். என—என்று தோழியர் சொல்ல. பாகத்தவ ளுக்கு—உமைக்கு. அமைக்கும்—அடக்கும்; பெயரெச்சம்.

241 அபய காத்திலங்க வைத்துருவின் மேலாம்
உபயன்மற்றோர் வீதிதனி லுற்றான்—அபரி

242 மிதமான தாருவன மேவு மூனிவோர்
இதமா யிவண்மருவு மின்பம்—உதவாத

243 சங்கைத் தவமே தவஞ்செய்தோ மென்னுமன்னும்
மங்கைக்கு மேலான மாமடந்தை—பொங்குகதிர்ச்

மடந்தை.

244 சந்திரனாற் சூரியனாற் றள்ளுண் டுடைந்தோடி
வந்து புகுந்து மறைந்துமறைந்—துய்ந்திடவே

245 வாணு மிருட்கு மலரோன் வகுத்துவைத்த
காணு ராண்போற் கருங்குழலாள்—தேனூறும்

246 சொல்லாண் மதனனுக்குஞ் சொல்லுவாள் புத்திகொங்கை
கல்லாள்கொக் கோகமுற்றுங் கற்றறிந்தாள்—எல்லாம்

---

240–41. அபயகரமானது போதுமென்று அடக்குதலைக்காட்டினாற் போன்றதென்பது கருத்து; "கூடுங் கதியொருகாற் கும்பிட்டாற் போதுமென, நாடு மபிநயத்தை நண்ணிற்றால்—ஓடியகட், காதனூர் றாணவொரு கால்காட்டிக் கையமைத்து, நாதனூர் செய்யு நடம்" (சிதம்பரமும்மணிக்கோவை, 29) என்பதில் அபயக்கை போதுமென்னும் குறிப்பைக்காட்டுவதாகக் கூறப்பட்டிருத்தல் காண்க.

241. ஐந்துரு—பஞ்சகிருத்தியத்திற்குரிய மூர்த்திகளின் உருவங்கள். உபயன்—அருவுருவுடையவர்.

242. மூனிவோர்: எழுவாய்.

243. சங்கைத்து—சந்தேகமுடையது. அவமே தவஞ்செய்தோம்; அவமே—வீணாக. மங்கைக்கு—மோகினிக்கு.

245. காணுரண்—காட்டரண்; குழலுக்குக் காட்டை உவமைகூறுதல் மரபு; "குழற்கா டேந்துமிள வஞ்சிக் கொடியே" (மீனாட்சியம்மைபிள்ளைத் தமிழ், வருகைப். 9); "ஐம்பாற் காடுஞ் சுமக்குங் கரும்பே" (சகலகலாவல்லிமாலை, 2.) ஆரும்—ஒக்கும்.

246. புத்தி சொல்லுவாள். கல்—மலை. கல்லாள்......கற்றறிந்தாள்: சொன்முரண்.

247 கரும்புருவ வில்லாள் கமழ்கமல வில்லாள்
கரும்புருவ வில்லாள்வேற் கண்ணாள்—அரும்பு

248 நகையா டளிரன் னகையாள் பணிமே
னகையாள் புவிமே னகையாள்—சகமகிழும்

249 பூங்குமுதச் செங்கனிவாய்ப் பூவைதனித் தில்லிருந்தோர்
பாங்கிதனைக் கூவியுயிர்ப் பாங்கியே—ஈங்கெழுதும்

250 ஓவியங்கை வந்த வொருவனைமுற் றுதழுலைத்
தேவி மணாளன் றிருவுருவை—நீவகுப்பாய்

251 என்னப் படத்தி லிசைத்துவா வென்னனுமே
அன்னமன்ன தோழி யறிந்துசொல்வாள்—முன்னவன்றன்

252 வேணி யெழுதவல விஞ்சைகற்று னேனுமதிற்
பாணிதனை யெவ்வாறு பாணிப்பான்—மாணமைந்த

253 நெற்றி யெழுதவல்ல நேர்மைகற்று னேனுமதில்
உற்றகனற் கண்ணெழுத வொண்ணாதே—மற்றுமிரு

254 கண்ணெழுதக் கற்றாலுங் கற்றாலுந் தண்ணருள்கூர்
வண்ண மமைக்க வசமாமோ—உண்மகிழும்

---

246-7. எல்லாம் கரும்பு உருவ வில்லான்—உருவமெல்லாம் கரும்பைப் போன்ற ஒளியையுடையவள்; வில்—ஒளி. கமல இல்லாள்—திருமகளைப்போன்றவள். கரு புருவ வில்லாள்—கருமையாகிய புருவ வில்லையுடையவள்.

248. தளிர் அன்ன கையாள். பணி மேல் நகையாள்—ஆபரணங்களால் மேலாகிய விளக்கத்தையுடையவள். புவி மேனகையாள்—பூமியில்வந்த மேனகை போன்றவள்.

249. தனித்து இல் இருந்து.

249-50. எழுதும் ஓவியம் கைவந்த ஒருவனை—ஓவியம் எழுதுவதில் தேர்ச்சிபெற்ற ஒருத்தனை; "ஓவியத் துறைபோய வொருவனை" (நைடதம், அன்னத்தைக். 6.) வகுப்பாய்—எழுதுவாயாக.

251. என்னனுமென்று அன்னம் சொன்னவுடன்.

252. விஞ்சை—வித்தையை. பாணி—தண்ணீர்; ஆகாசகங்கை. பாணிப்பான்—திருந்த அமைப்பான்; 118. மாண்—மாட்சிமை.

255 தோடெழுத வல்லனென்று சொன்னாலும் வீணைவல்லோர்
பாட விசைக்கப் படுவதோ—நாடிநின்று

256 செம்பவள வாய்வகுத்துச் செய்தாலு முன்னதர
விம்பவளத் தேனருந்த வேண்டாமோ—நம்பரமன்

257 கந்தரம்போ லெழுதக் கற்றானே யானாலும்
முந்தச் சுருதி முழங்குமோ—வந்தவிஞ்சை

258 யாலிங்ங னஞ்சங்க ராவெழுதி னாலுமுன்னை
ஆலிங்க னஞ்செயலை யாரமைப்பார்—மாலறியா

259 நித்தன் றிருமார்பு நின்றெழுதி னாலுமுன்மேற்
சித்த மகிழ்வதெனச் செய்யவல—வித்தகனே

260 தாட்டிணைகள் போலெழுதித் தந்தாலுந் தாண்மாறி
ஆட்டுவிக்கப் பாண்டியனா லல்லவே—வாட்டடங்கண்

261 மின்னே மணியே விளக்கே விலைமதியாப்
பொன்னேநால் வேதப் பொருளாவான்—தன்னுருவைத்

262 தூரிகையி னாலெழுதச் சொன்னதென்ன புத்தியத்த
நாரிதனைக் காணிலுள நாணாதோ—போறிஞர்

---

255. தோடு-ஒருவகைக் காதணி. வீணைவல்லோர்-கம்பளர் அசுவதரர்; 65-ஆம் கண்ணிக்குறிப்பைப் பார்க்க.

256. அதர விம்ப வளத்தேன்-கீழுதடாகிய கொவ்வைக் கனியின் இனிமையுடைய தேனை.

257. சுருதி-வேதம்; இங்கே சாமகானம்; "சங்கணி குழையர் சாமம் பாடுவர்" (திருஞா. தே.); "மாமலர்த் தெரியலான் மணியிடற் றிடைக்கிடந்து, சாம கீதம்" (சீவக. 2038); "தன் கண்டம் மீதுலராத சாமவேதமார்ப் பவர்போல்" (திருவிளை. மாமனாக. 23); தக்க. 610-ஆம் தாழிசையுரையின் அடிக்குறிப்பைப் பார்க்க.

257-8. விஞ்சையால் இங்ஙனம் சங்கரா எழுதினாலும்; இங்ஙனம்-இப்படம். ஆலிங்கனம் செயலை-தழுவுதலை.

259. வித்தகனே; ஏகாரம் எதிர்மறை.

262. தூரிகை - எழுதுகோல். அத்த நாரிதனை - பாதி வடிவத்திலுள்ள பெண்ணை; என்றது உமாதேவியாரை.

263 அப்படிய னவ்வுருவ னவ்வணத்த னென்றறிவார்
இப்படிய னிவ்வுருவ னிவ்வணத்தன்—ஒப்புடையன்

264 ஆமென் றெழுதவல்லா ரியாரே மலரிதழித்
தாமந் தரித்தவிண்ணோர் தம்பிரான்—மாண்பியஞ்சேர்

265 உள்ளத்தி னுள்ளன் புடையார் கருத்தறியும்
வள்ளல் வலிய வருமென்னத்—தெள்ளமுத

266 வாரி பவள மலைபோன் மலையனைய
தேரின் வரமகிழ்ந்து சென்றணைந்து—பாரினின்று

267 கண்டா டுதித்தாள் கனிந்தாள்பே ராசைமேன்மேற்
கொண்டாள் பணிந்தெழுந்து கும்பிட்டாள்—எண்டிசையும்

268 கட்டிய தானைக் கருணா காரிதியே
பட்டிமையில் லாருளத்தின் பாக்கியமே—புட்டிலிலே

269 ஐயம் படைத்தவனை லையா பரிகலத்தில்
ஐயம் படைத்தவர்போ லாயினேன்—மெய்யணியோ

---

263—4. "மைப்படிந்த கண்ணாளுந் தானுங் கச்சி மயானத்தான் வார் சடையா னென்னி னல்லால், ஒப்புடைய னல்ல னொருவ னல்லன் ஓரூர னல்ல னோருவம னில்லி, அப்படியு மந்நிறமு மவ்வண் ணமும் அவனருளே கண்ணாகக் காணி னல்லால், இப்படிய னிந்நிறத்த னிவ்வண் ணத்தன் இவனிறைவ னென் றெழுதிக் காட்டொ ணாதே" (திருநா. தே.) இதழித்தாமம்—கொன்றைமாலை.

265. வரும்—வருவான்.

267—8. எண்டிசையுங் கட்டிய தானை—திகம்பரம். பட்டிமை—பொய்; "பட்டிமையும் படிறுமே பேசுகின்றார்" (திருநா. தே.), "பாவகஞ் செய்து திட்டிப் பட்டிமை யோலை யுய்ப்பான்" (திருவிளை. 30:13.) புட்டிலில்—அம்பறாத்தூணியில்.

269. ஐ அம்பு அடைத்தவன்—ஐந்து மலர்ப்பாணங்களைச் செருகிவைத்தவன்; மன்மதன். பரிகலத்தில் ஐயம் படைத்தவர்போல்—பிச்சைப்பாத்திரத்தில் பலியிட்ட தாருகாவனமுனிவர் பத்தினிகளைப்போல. ஆயினேன் என்றது காம மயக்கங்கொண்டு ஆடை முதலியவற்றை இழந்ததைக் குறிப்பிட்டபடி. மெய் அணி—முழு உடம்பாகிய ஆபரணம்; என்றது காயாரோகணத்திருவுருவத்தைக் குறிப்பித்தது.

270 டென்பணியுங் கொண்டீ ரிமய மடந்தையைப்போல்
என்பணியுங் கொண்டாலா ரேசுவார்—முன்புபச்சை

271 மாலையளித் தீரெனக்கு மாலையளித் தீரதற்கு
மாலையளித் தீரென்றால் வாழ்த்தேனோ—சூல

272 தாரோ யெனவா தரத்தா லுரைக்க
வரதன் மனமகிழ்ந்து மற்றோர்—திருவீதி

273 சென்று னிவளுந் திருமனையிற் புக்கிருந்தாள்
நின்றாரிற் பின்னுமொரு நேரிழையாள்—நன்றிசைந்த

அரிவை.

274 மானை மருட்டிவரி வண்டைச் சிறைப்படுத்தி
மீனைப் பயமுறுத்தி விண்டலர்ந்து—தேனார்

275 வனசத்தைப் பங்கமுற வாட்டிக் குவளை
இனசத் துருவைவன மேற்றிச்—சினமா

276 வடுவை வடுச்செய்து வாருதியோ மேன்மைப்
படுமென் றதோகதியாய்ப் பண்ணிக்—கடுவினுக்கு

---

270. என்பு அணியும்-எலும்பாகிய ஆபரணத்தையும். என் பணியும் கொண்டால்-என்னுடைய குற்றேவலையும் ஏற்றுக்கொண்டால்.

271. மாலை-திருமாலை. அளித்தீர்-காப்பாற்றினீர். எனக்கு மாலை அளித்தீர்-அடியேனுக்கு மயக்கத்தைத் தந்தீர். அதற்கு-அதனை நீக்குதற்கு. மாலை-பூமாலையை.

274. மருட்டி-மருளச்செய்து. சிறை-இறகு; சிறைச்சாலையென்பது மற்றொருபொருள். பயம்-நீர், அச்சம்; "உன் கண்ணோக்கி மீன்பயங் கொண்டலையும்" கோடீச்சுரக்கோவை, 23.

275. பங்கம்-சேறு, பழுது; "புங்கமுறு மம்புயத்தைப் பங்கமுற்ற தென்னவொளிர் முகத்தினாள்" (சரபேந்திர. குறவஞ்சி, 11.) வனம்-தண்ணீர், காடு; தோற்றவர்கள் காட்டில் மறைந்திருத்தல் மரபு; "இனத்தினுடனும்ப வெழிற்போது தோற்று, வனத்திருக்க மன்னரியசெவ் வாயாள்" (பெருவுடையாருலா,185) என்பதன் அடிக்குறிப்பைப் பார்க்க. சின-சின்ன; சிறிய; "சின்னவிடைப் பாகா" காசிக்கலம். 79.

276. மேன்மைப்படும்-மேன்மையை அடையும், மேலே மேகம்பொருந்தும். அதோகதியாய்-ஆழமுடையதாக, தாழ்ந்தநிலையுடையதாக. கடு-விடம்.

277 நித்யகண்ட மேவு நிலைகொடுத்து வென்முனைக்குச்
சத்தியிலை யென்னவெற்றி தான்கொண்டு—கத்தி
278 உறையிடக் காணாதென் றுயிரின் கொலைக்கு
மறலிதன்ம னாமெனப்பேர் வைத்து—விறலார்
279 உருவை யுடையா னுடைய கணைபோன்
றரிவை யுறுகண் ணரிவை—பருவமுற்றும்
280 நாளிகே ரத்தினைத்தன் னல்லடிவீழ்த் திச்சக்ர
வாளத்தை யோட்டிகெடு வான்புகுத்தித்—தாளத்தை
281 ஒன்றொன்று தாக்கவிடுத் தோர்தாளிற் றாமரையை
நின்றிடெனத் தண்ட நியமித்துத்—ஞான்று

---

277. நித்ய கண்டம்-தினந்தோறும் கழுத்தில், தினந்தோறும் வரும் ஆபத்து. சத்தியிலை-வேலினது இலை, ஆற்றலில்லை; "சுத்தவீ ரத்தாங்கைத் துன்னுவடி வேலதனைச், சத்தியிலை யென்னுந் தடங்கணாள்" (பெருவுடையானுலா, 225), "வெற்றி வேலனீ டிதுசத்தி யிலையென வேலை, சுற்று மாநிலஞ் சொல்வுறு துணைமத விழியாள்" திருவிடைமருதூர்ப்புராணம், தேவவிரதச். 24.

278. உறையிடக்காணாது—உறைக்குள் இட்டால் தோற்றாது, உறைக் கணக்கிடவும் பற்றாது; உறை-ஒருவகை எண்; "உறையிடத் தேய்ந்திடு மிவ்வந்தி வானத் துடுக்குலமே" (திருவேங்கடத்தந்தாதி, 34.) மறலி-யமன். தன்மன்—தருமராசன், கொலையே யில்லாதவன்; "கூற்றுவனை யாருங் குலவுந் தருமனெனச், சாற்றிடச் செய்யுந் தடங்கண்ணாள்" (பெருவுடையானுலா, 183), "தருமனெனக் கூற்றை யெவருஞ் சொல்லக் கூர்த்த நயனத்தாள்" (சரபேந்திர. குறவஞ்சி, 11), "இயமனைத் தருமனெனவுயிர் வாட்டி ... ... ... இலகு மடக்கொடி கூர்விழி" திருவிடை. வரகுண. 73.

279. உரு—அழகு. உருவையுடையான்—சிவபெருமான். அரிவை உறும்—அரிகளையும் கூர்மையையும் பெற்ற, திருமாலை வைக்கப்பெற்ற.

280. நாளிகேரத்தினை—தேங்காயை. சக்ரவாளத்தை—சக்கரவாகப் பறவையை; "சோணாடர் போற்றிய செம்பொற் றியாகர் துறைசைவெற்பிற், காணா மருங்குலின் பூணாரக் கொங்கையைக் கண்டழிந்த, நாணாற் புவியி லொருவர்தங் கண்ணுக்கு நண்ணரிதாய்ச், சேணார் விசும்பிடைச் சக்கர வாகந் திரிகின்றதே" திருவாவடுதுறைக் கோவை, 22.

280-81. "மாயைமுலைக் கிணையெனவென் மூன்றானும் வந்ததென வலக்கைத் தாளம், போயிடக்கைத் தாளமதைப் பொறாமையினாற் றாக்குதல் போற் புடைத்தொலிப்ப" (பிரபுலிங்கலீலை, மாயைபூசனை. 50.) தண்டம்—தண்டனை.

282 கரியைக் கிரிவைத்துக் கன்னிகா ரத்தைத்
தெரியலர்தூற் றச்சிறுமை செய்து—பரிய

283 மணிச்செப்பை வாயடைத்து வைத்த பணியுள்
தணிச்சொப்பில் கூவிளத்தைச் சாலக்—கணிப்பரிய

284 வித்தையுள்ள வெல்லாம் வெளிப்படுத்தக் கண்டுசிவ
பத்த ரிடத்திருக்கப் பாவித்து—மொய்த்தமலர்ச்

285 செண்டைப் புலர்த்தித் தினகரர் சூழ்ந்திடும்வே
தண்டத்தைப் போரிற் றலைமடக்கிக்—கண்டித்

286 திணைத்திறுகி விம்மி யிறுமாந் திளகிப்
பணைத்துத் திதலை பரந்து—துணைக்கண்

287 கறுத்து வெளியிடையிற் காணு திடையை
ஒறுத்துப் புனைகச் சுவந்து—மறுப்படாச்

288 சந்தந் திமிர்ந்து தாள வடம்புனைந்து
கந்தங் கமழுங் கனதனத்தாள்—அந்தரத்தின்

289 என்றடுத்து வந்தானு மென்றுவந்தீ ரென்றெதிர்த்து
நின்றடுத்துக் கேட்குமிரு ணேர்குழலாள்—வன்றிறல்சேர்

---

282. கரி-யானை. கிரிவைத்து:தோற்றவர்கள் மலையை அடைவது மரபு. கன்னிகாரத்தை-கோங்கரும்பை. தெரியலர் தூற்ற-யாவரும் தெரியும் மலர்களைப்பொழிய, பகைவர்கள் பழிக்க. பரிய-பருத்த.

283. வாயடைத்து-வாயை மூடி, பேசாமலிருக்கச்செய்து. பணியுள் தணிச்சு-ஆபரணங்களை அதற்குள் தங்கச்செய்து, குற்றேவலில் அடங்கச் செய்து. கூவிளத்தை-வில்வக்கனியை. கணிப்பு அரிய-அளவிடுதற்கரிய.

284. வித்தை-விதையை, கல்வி. வில்வக்குடுக்கையைத் திருநீறுவைத்துக்கொள்ளுதற்குச் சிவனடியார்கள் பயன்படுத்திக்கொள்வார்கள்.

285. புலர்த்தி-வாடச்செய்து. தினகரர்சூழ்ந்திடும் வேதண்டம்-மேரு மலை. தலைமடக்கி-வளையச்செய்து, வெட்கத்தால் தலைகுனியச்செய்து; அது வில்லானபோது வளைந்தமை இங்கே அறியற்பாலது.

286. திதலை-தேமல். 288. சந்தம்-சந்தனம்.

289. என்று-சூரியன். என்று வந்தீர்:ஒருசமயத்தில் பாம்பு கருடனை நோக்கி, 'சுகமா' என்று கேட்டதை இது நினைப்பிக்கின்றது. காஞ்சிப். பணைதரிச். 5.

290 அங்கோல மாரவே ளாக்கினையுஞ் சக்கரமும்
செங்கோலும் போன்ற திறலினாள்—பொங்குகதிர்ச்

291 சித்ரமணி மேடைதனிற் சிங்கா தனத்திருந்து
வித்தாரப் பாடல் விறலிக்கு—மூத்தாரம்

292 பூந்துகில் சந்தம் புனைய வளித்துமகிழ்ந்
தேந்திழையே முன்னா ளிசைவாது—சாய்ந்திடவே

293 எம்பிரான் கூட விறைவனரு ளாற்செயித்த
கும்பமுலை மாமயிலே கூறக்கேள்—உம்பரிலே

294 வீரங் கருணை மிகுந்த சவுந்தரமும்
சேருங் கடவுளர்யார் செப்பென்ன—ஆர்வமுடன்

295 வீணை யிடந்தழீஇ மென்மா டகந்திருத்திப்
பாணினியு மின்னிசையாற் பாடுவாள்—ஆண்மைமிகு

296 காமன் புரத்தைக் கருதார் திரிபுரத்தை
மாமன் சிரத்தைமல ரோன்சிரத்தை—ஏமமுறு

297 அந்தகனை யந்தகனை யாதி யடையலரை
முந்தத் தடிந்த முறைகேட்கின்—விந்தையாம்

298 பார்த்து நகைத்துப் பரிகசித்துக் கிள்ளியுதைத்
தார்த்துவெகு ளாதவிளை யாட்டமரை—நேர்த்திடவே

---

290. "அலகில் சுரபதி மதனர்க ளரசிவர் அவர திகிரியு மணிகமும்...... இவர்" (தக்க. 38) என்பதையும் அதன் உரையையும் பார்க்க.

292. சாய்ந்திட—தோல்வியுற.

292–3. விறலியைப் பாணபத்திரர் மனைவியாகவே எண்ணிக் கூறியது; இங்கேகூறிய வரலாற்றைத் **திருவிளையாடற்புராணம்** இசைவாதுவென்ற படலத்தா லறியலாகும்.

294. சவுந்தரம்-அழகு. என்ன-என்று அரிவை கேட்ப.

295. மாடகம்-முறுக்காணி, பாணினி-விறலி.

296. புரத்தை-சரீரத்தை. மாமன்-தக்கன். ஏமம்-இன்பம்.

297. அந்தகனை-யமனை, அந்தகாசுரனை. ஆதி அடையலர்-முதலாகிய பகைவர்; என்றது யானை, சலந்தரன் முதலியவர்களை.

298. பார்த்தல் முதலியவற்றை நிரனிறையாகக் கொள்க. விளையாட்டமரை-விளையாட்டுச்சண்டையை. நேர்த்திட-ஒக்க.

299 எத்தேவர் செய்வா ரிஃதேவ ரான்முடியும்
அத்தேவ ரெல்லா மடலுற்றால்—மெய்த்துணைகள்

300 கூடுவா ராயுதங்கள் கொள்வார் சமரினுடைந்
தோடுவார் மீள்வா ருடற்றுவார்—நாடரிய

301 வஞ்சனையால் வெல்வார் மறுத்தக்காற் செய்வதென்னென்
றஞ்சுவார் வீர மறியோமோ—மிஞ்சும்

302 அரிபிரம ரேனுமுன மாணவமுற் றாரேல்
அரிய னரியதவத் தன்பர்க்—கெளியனென்று

303 சொல்லுவது நிற்கமுனந் தும்பி சிலந்தியரா
வல்லமையில் லாதகய வாய்தமக்கும்—வெல்லமரில்

304 அன்னை யிழந்த வடலேனக் குட்டிகட்கும்
என்னையோ ரிக்கு மெறும்புக்கும்—தன்னிடத்தில்

305 அன்புதவி யென்று மழியாப் பெரும்பதவி
பின்புதவி யாள்கருணைப் பெம்மானும்—கம்பான்காண்

306 பெண்கண்மயக் கற்றதவப் பேரறிவு தானிழந்து
பெண்கள் வடிவெடுத்துப் பேரெழில்கண்—டெண்களிப்பி

307 னாலே யொருபதினா றாயிர மாமுனிவோர்
மாலாய்ப் புணர்ந்ததிரு மாலேபெண்—பாலாய்

---

299. இஃது எவரால் முடியும். அடலுற்றால்-சண்டைசெய்யப்புகுந்தால்.

296-303. இவற்றில் வீரம் கூறப்பட்டது.

303. இனி, கருணை கூறப்படும். தும்பி-யானை. அரா-பாம்பு. தும்பி முதலிய மூன்றும் பூசித்துப் பேறுபெற்ற தலம் காளத்தி. தும்பி சிலந்தி இரண்டும் பூசித்துப் பேறுபெற்ற தலம் திருவானைக்கா. தும்பியென்பதற்கு வண்டென்று பொருள்கொண்டு அது பூசித்துப் பேறுபெற்றது ஸ்ரீசைலம், திருவண்டுறை எனக் கொள்க. பாம்பு பூசித்துப் பேறுபெற்ற தலங்கள்: திருக்குடந்தைக்கீழ்க்கோட்டம், திருநாகேச்சரம், திருநாகைக்காரோணம், திருப்பாம்புரம், திருப்பாம்பணி, திருக்கேதீச்சரம் முதலியன. கயவாய்-கரிக்குருவி; இது பேறுபெற்ற தலம் திருவாலவாய்.

304. ஏனக்குட்டி-பன்றிக்குட்டிகள்; இவற்றிற்கு அருள்செய்தது திருவாலவாயில். ஓரி-நரி; நரி அருள்பெற்ற தலம் திருக்குற்றாலம். எறும்பு அருள்பெற்ற தலம் திருவெறும்பீச்சரம்.

308 மருவி னிமவான் மருக னழகுக்
கொருவரிணை யாவாரு முண்டோ—பொருவிசய

309 வீரப் பெருக்கழகன் மென்கருணைச் சீரழகன்
ஆரத் திருமேனி யாரழகன்—ஓரழகுக்

310 கெவ்வளவு மீச னிணையிலியென் றேயுரைக்கும்
அவ்வளவிற் பல்விபத்தி னார்ப்பரவம்—கொவ்வையிதழ்

311 மாது செவியுறலும் வந்ததுவே யென்றெழுந்தாள்
நாத னடிபணிந்து நாடியே—சீதமலி

312 காவெல்லா மாரக் கனியே கனிமுதிரும்
பூவெல்லா நாணின் பொருத்தமே—மேவுவயல்

313 மேடெல்லா மன்மதன்கை வில்லே குடியிருக்கும்
வீடெல்லாஞ் சேனை விளக்கமே—கூடும்

314 இரவெல்லாம் வேள்களிற்றி னீட்டமே கொல்லைப்
பரவெல்லாம் சொல்வாம் பரியே—தரணியிலே

315 எங்கெங்கே பார்த்தாலு மென்னவேள் கண்டவிடத்
தங்கங்கே தேரு மவனுமே—சங்கரோ

316 தேவரீர் சித்தந் திரும்பினு விக்கணமே
யாவு முறவா யிணங்குமென்று—பாவை

317 புகலக் கடைக்கணித்துப் போந்துபின்னோர் வீதி
திகழ வதிலோர் தெரிவை—மகிழும்

## தெரிவை.

318 அயிலு மயிலு மனமுங் கனமும்
குயிலும் வடமுங் குடமும்—இயலும்

---

306-8. இவற்றில் அழகு கூறப்பட்டது.
309. ஆரம்-சந்தனம்: முத்துமாம்.
310. ஆர்ப்பரவம்: இருபொருளோட்டு. 312. கா-சோலை. நாண்-வெள்கு.
313. வில்-கரும்பு. சேனை-வேளையர்.
314. களிறு-இருட்டு. பரவு-பரப்பு. பரி-இனி.
315. தேர்-தெளிதல்.
318. அயிலும்-வேலும். அனம்-அன்னப்பறவை. கனம்-மேகம். வடம்-ஆலிலை. குடம்-கும்பம். இயலும்-அசைவின்று.

319 கொடியுந் துடியுங் குளிருந் தளிரும்
படியுமிசைக் காந்தளொடு பாந்தள்—அடிமையெனும்

320 மேன்மைபெறு கண்சாயல் வீதிநடை கூந்தலிசைப்
பான்மை யுதரம் பயோதரங்கள்—வான்மருங்குல்

321 மெல்லடிசெங் கைநிதம்ப மிஞ்சு சவுந்தரஞ்சேர்
வல்லி மதனகலா வல்லியாள்—தொல்லுலகில்

322 வீரப்ர தாப விசயமன்னர் கப்பமிடப்
பாரப்ர தாபம் படைத்தமன்னர்—நேரொக்க

323 வச்ரமணி மேடைதனில் வாளரிச்சிங் காதனத்தில்
இச்சையுடன் வீற்றிருக்கு மெல்லைதனில்—உச்சிதஞ்சேர்

324 அந்துறப்பெண் ணாமொருத்தி யானதுறி சொல்வனென்றே
அங்குறப்பெண் ணாரமுத மாயினாள்—பங்கமுறு

325 தோர்ந்தென் மனக்குறிப்பி லொன்றுளது சொல்லெனவே
தேர்ந்து மலைக்குறப்பெண் சிந்தைமகிழ்ந்—தாய்ந்துநன்றாய்

326 ஓர்வருட மோர்மாத மோர்நா ளொருவாரம்
ஆர்வமுடன் சொல்லென் றவளிசைப்பச்—சீர்பொருந்த

327 உன்னும் வருட முரைக்கும் பதினொன்றும்
என்னுமுன்னே யீச்சுரன்மே லிச்சையென்றாள்—பின்னுமவள்

---

319. துடி-உடுக்கை. குளிரும்: பெயரெச்சம்.

320. சாயல்-மென்மை. வீதி-நேரோடல். இசைப் பான்மை-இசைப் பாட்டின் பகுதி. உதரம்-வயிறு. பயோதரங்கள்-கொங்கைகள். வான்-பெருமை. மருங்குல்-இடை.

318–20. கண் முதலியவற்றிற்கு அயில் முதலியவற்றை நிரனிறையாக உவமை கொள்க. இடைக்குக் கொடியும் துடியும் உவமைகள்.

322. படைத்தமன்னர்-சக்கரவர்த்திகள்.

323. ஆரிச்சிங்காதனம்: இருபெயரொட்டு. எல்லை-காலம். உச்சிதம்-மேன்மை.

324. அம் குறப்பெண்ணும் ஒருத்தி. அந்து உற

325. சொல் என-சொல் என்று தெரிவை சொல்ல.

326. நாள்-நட்சத்திரம். வாரம்-கிழமை. அவள்-குறத்தி.

327. பிரபவ முதலிய அறுபதுவருட வரிசையில் பதினொன்றாவது ஈசுவர வருடம்.

328 மாதமொரு நாலென்றாண் மன்றாடி தன்மீதிற்
காதலுற்றாற் போலுங் கருத்தென்றாள்—பேதமில்லா

329 நாளினுமோ ராறென்றா ளன்றுதிரு வாதிரையான்
தோளின்மேன் மையலென்று சொல்லினாள்—கோளிலது

330 வார மிரண்டென்றாள் வாழ்சோம சேகரனைச்
சேர மனதிற் சிறந்ததென்றாள்—ஆரணங்கும்

331 ஆமெனது யோகந்தா லந்தக் கரணமுடன்
தாம மணிப்பரோ சாற்றென்ன—மாமயிலே

332 வந்தோர் கணப்பொழுதின் மாலை யுதவுமதிற்
சந்தேக மில்லையெனத் தானுவந்து—பிக்கைதமிரு

333 பொன்னுடை மின்னுமணிப் பூணுதவு மவ்வளவில்
பன்னகப் பூணு பரணத்தான்—தன்னெடுந்தேர்

334 மங்கலங்கள் சேர்வீதி மன்னுதலு நன்னுதலும்
அங்கலங்கண் மின்னவெழுந் தாங்கணைந்தாள்—செங்கை

335 மலரைக் குவித்து வதனமலர்த் தாண்மேல்
மலரைக் குவித்துவிட்டான் மாரன்—அலரெடுத்து

336 கல்லாருந் தூற்றினார் நாண்மடமச் சம்பயிர்ப்பாம்
எல்லாமோர் பக்கத் திருத்திவைத்துச்—சொல்லலுற்றாள்

---

328. நாலாவதுமாதம் ஆடி.

329. ஆறாவது நட்சத்திரம் திருவாதிரை. ஆதிரையான்-சிவபெருமான். கோள்-ஞாயிறு முதலியன.

330. இரண்டாவது வாரம் சோமவாரம்; "சோம சுந்தர னுரிய வார மாதலாற் சோம வாரம்" திருவிளை. 14: 7.

331. யோகத்தால்-நல்லூழால். அந்தக்கரணமுடன்-மன உவப்புடன். 326-ஆம் கண்ணிமுதலியவற்றில் வருடம் முதலியவற்றைக்கூறியதோடமையாது யோகம், கரணம் என்பனவையும் தொனிக்கும்படி கூறினார்.

334. அம் கலங்கள்-அழகிய ஆபரணங்கள். ஆங்கு-வீதியில்.

